[21st September 1961

SRI N. K. PALANISAMI : ஸார், விவகாரம் ஒரு புறம் இருந்தாலும் நம்முடைய மாநிலத்திலுள்ள 30 குளங்களுக்கு தண்ணீர் நிறப்பிக் கொள்ளுவதற்கு தண்ணீர் விடவேண்டும் என்று ஒரு ஒப்பந்தம் இருக்கிறது. அந்த ஒப்பந்தத்தை அமுல் செய்து 30 குளங்களை நிறப்புவதற்கு பேச்சுவார்த்தை நடத்தி முடிவு எடுக்கப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் 10 குளங்களைக் குறைத்துவிட்டார்கள். ஏற்கெனவே 40 குளங்களுக்கு தண்ணீர் நிறப்பிக் கொள்வதற்கு ஒப்பந்தம் இருக்கிறது.

*Irrigation Circle, Coimbatore*

*1688 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இரண்டாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் கோயம்புத்தூர் சர்க்கிள் Irrigation Fund-க்காக ஒதுக்கப்பட்ட தொகை எவ்வளவு ?

(இ) இத் தொகையிலிருந்து 1960-ம் வருஷம் வரைக்கும் எவ்வளவு தொகை செலவழிக்கப்பட்டது ?

(உ) கோயம்புத்தூர் சர்க்கிள் Irrigation டிபார்ட்மெண்டு மூலம் எத்தனை வேலைகள் செய்யப்பட எவ்வளவு தொகை தேவையென்று சர்க்காருக்குத் தெரிவிக்கப்பட்டது ?

(எ) மேற்கண்ட வேலைகளிலே எத்தனை வேலைகள் செய்யப்பட்ட எவ்வளவு தொகை சாங்ஷன் செய்யப்பட்டது ?

(ஐ) 1960–61-ல் எத்தனை திட்டங்கள் நிறைவேற்ற எவ்வளவு தொகை செலவழிக்க பரிசீலனை நடத்தப்பட்டு வருகிறது ?

THE HON. SRI P. KAKKAN :

| | *Major.* | *Minor.* |
|---|---|---|
| (அ) | Rs. 315·08 lakhs .. .. | No separate allotment was made for Minor Works in the Second Plan for Public Works Department. Each year a programme was being drawn up in consultation with the Board of Revenue. |
| (இ) | Rs. 330·94 lakhs .. .. | Rs. 6·77 lakhs (approximate). |
| (உ) | 3 works Rs. 315.08 lakhs .. | 11 works Rs. 6·72 lakhs. |
| (எ) | 3 works Rs. 315·08 lakhs .. | 11 works Rs. 6·72 lakhs. |
| (ஐ) | No new works. Rs. 386 lakhs has been provided in the Budget Estimate for 1960–61 for the above three works. | 27 works About Rs. 4·44 lakhs. This excludes 0·31 lakhs provided in 1959–60 and 1960–61 for Special Minor Irrigation Works. Thirty-one works have been sanctioned till end of March 1961. |

*Fisheries.*

DEPUTY SPEAKER : As the hon. Member who gave notice of Q. No. 1689 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

* 1689 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether the Government have taken any statistics regarding the average catch of fish in Colachel, Kanyakumari, Tuticorin and Mettur Dam; and